[20th September 1958

*Houses for Harijans in Tanjore district*

* 382 Q.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் 1956–57, 1957–58-ல் ஹரிஜனங்களுக்காக எத்தனை வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டன ;

(ஆ) அதற்காக செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN :

(a) 1956–57 ... 229 houses.
1957–58 ... 234 houses.

(b) 1956–57 ... Rs. 1,25,139–11–0.
1957–58 ... Rs. 1,28,280.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் இந்த திட்டம், ஹரிஜனங்களுக்கு சலுகை அளிக்கப்பட்டிருக்கிற 10 வருஷ காலத்தில், கடைசிக் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அதோடு தெருவிற்கு 20 வீடுகள் கட்டுவது என்று திட்டம் இருப்பதை, தெருவிற்கு 50 வீடுகள் கட்டுவது என்று திட்டம் போடுவார்களா ? அல்லது இந்தச் சலுகையை 25 வருஷங்கள் நீடிக்க வேண்டுமென்று சிபார்சு செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : 20 வீடுகள்தான் கட்டுவதற்கு திட்டம் இருக்கிறது என்று சொல்வது சரியல்ல. குறைந்தது 20 வீடுகள், அதிகப்படி 30 வீடுகள். 50 வீடுகள் கட்டுவதானால் பணம் ஜாஸ்தி வேண்டும். அதைப் பரிசீலனை செய்துதான் பார்க்கவேண்டும்.

SRI P. JAYARAJ : ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் போது அவர்கள் பங்கு கொடுக்கவேண்டுமென்றிருப்பதால், அவர்கள் பங்கு கொடுத்து வீடு கட்டிக்கொள்ள வசதியில்லாமல் இருக்கிறார்கள். இந்தப் பங்குத் தொகையில்லாமல் கட்டிக்கொடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : பூராவையும் இலவசமாகக் கொடுக்க முடியாது. கொஞ்சம் வேண்டுமானால் கடனைக் கொடுக்கலாம்.

*Political prisoners*

* 383 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the number of "Political" prisoners released on parole so far this year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is four.

SRI N. K. PALANISAMI : அரசியல் கைதிகளில் பல பேருக்கு 40 வருஷங்கள், 50 வருஷங்கள் தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது. பரோலில் எல்லோரையும் விட ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 40 வருஷம், 50 வருஷம் தண்டனை கொடுத்திருக்கிற விவரங்கள் என்னிடம் இல்லை. அரசியல் கைதிகள் மட்டுமல்ல, எல்லோருக்குமே பரோல் கொடுக்கப்படுகிறது. ஆனால் தகுந்த காரணங்கள் வேண்டும். அதாவது குடும்பத்தில் ஏதாவது கஷ்டங்கள் முதலியவை ஏற்பட்டால் இந்த பரோல் கொடுத்து வருகிறோம்.

20th September 1958]

SRI S. B. ADITYAN : கடந்த வருஷ இறுதியிலே ஈ. வே. ராமசாமி பெரியாருடைய சட்ட எரிப்பு இயக்கத்திலே கலந்து கொண்டு தண்டனையடைந்தவர்கள் அரசியல் கைதிகளாகக் கருதப்பட்டார்களா ? அப்படியானல், குற்றக் கைதிகளுக்குக் கொடுக்கப்படாத வசதிகள் என்னென்ன கொடுக்கப்பட்டன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசியல் கைதிகளானலும், வேறு குற்றம் செய்து தண்டிக்கப்பட்ட கைதிகளானலும், அவர்களுக்குக் கொடுக்கப்படும் ட்ரீட்மென்டில் வித்தியாசம் ஒன்றும் இல்லை. எல்லோருக்கும் ஒரே மாதிரி ட்ரீட்மென்ட்தான், நல்ல ட்ரீட்மென்டு (சிரிப்பு) என்னென்ன கொடுக்க முடியுமோ, அவைகள் கொடுக்கப்பட்டு வருகின்றன.

SRI P. S. CHINNADURAI : தண்டனைக்குள்ளான அரசியல் கைதிகளின் குடும்பத்தினருக்கு வாழ்க்கைப்பணம் கொடுக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ? அதை அரசாங்கம் எப்போது அமுலுக்குக் கொண்டுவர இருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பாதுகாப்புக் கைதிகளாக இருந்தால்தான் கொடுக்கப்பட்டு வருகிறது. தண்டிக்கப்பட்டவர்களுக்கு அல்ல.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : பல ஆண்டுகள் தண்டனை அனுபவித்து வருபவர்களை விடுதலை செய்வதாகக் கேட்டிருக்கிறேன். சமீபத்தில் வாரக் கணக்கில் தண்டனை அனுபவித்து வந்தவர்கள் துரித மாக விடப்பட்டதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திராவிடக் கழகக் கைதிகளில்கூட 18 மாதம், 2 வருஷம் என்று தண்டனை அடைந் தவர்கள் இருக்கிருர்கள். சிலர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்கள், சிலர் இனிமேல் இந்தமாதிரிச் செய்வதில்லை என்று உறுதி கொடுத்தார்கள். அதன் பேரில் அவர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். (ஸ்ரீ எ. கோவிந்தசாமி எழுந்தார், ஸ்ரீ பி. யு. சண்முகம் எழுந்தார், ஸ்ரீ எம். பி. சுப்பிரமணியம் எழுந்தார்.) நான் சொல்வது திராவிடக் கழகக் கைதிகளைப்பற்றி.

SRI M. JAGANNATHAN : After all political prisoners are in jail for holding some honest differences of opinion in politics. So will the Government consider the desirability of a general amnesty in the case of such prisoners who have already served long terms of imprisonment?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member for his information that no one is put in prison for holding honest differences of opinion or even dishonest difference of opinion. People are convicted for specific acts including acts of violence.

SRI K. ANBAZHAGAN : அரசியல் கைதிகள் சிறைச்சாலையில் இருக்கும்போது அவர்களை நடத்துகிற முறையில் வேறுபாடு இல்லை என்று அமைச்சர் தெரிவித்தார். சிறைச்சாலையில் வேறுபாடு இல்லையென்றால், சிறையிலிருந்து வெளியே வந்த பிறகு அரசியல் கைதிகள் என்று குறிப் பிடாவிட்டால் அவர்களுடைய நிலை பாதிக்கப்படுகிறதாகையால், ஒருவர் அரசியல் குற்றவாளியா அல்லது வேறு வகைக் குற்றவாளியா என்று குறிப்பிடப்படவேண்டிய அவசியமிருப்பதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பின்னல் அதனல் தகுதியின்மை ஏற்பட்டால், அது சட்டப்படி கவனிக்கப்படும்.